பரப்பிரம்மமே துணை.



# பூரணமாலை.





இஃது

உம்பலச்சேரி

அருணாசல சுவாமிகளால்

இயற்றப்பட்டது.




பேரளம் திருமீயச்சூர்

பிர்ம்ம வித்தியா அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பெற்றது.

இதன் விலை] [அணா 3.

1918.

பரப்பிரம்மமே துணை.

# பூ ர ணை மா லை.

ஆதிபரம்பரையே கலையே யானந்தமாடிநின்றாய்
சோதியில்லந்தருளுங் கலையே சொல்லாலுணர்த்திவைப்பாய்
சொல்லாலுமில்லையது கலையே சும்மாயிருத்திவைத்தாய்
அல்லலைநீக்கிவிடு கலையே யறிவேன்சமாதியுமே
நாட்டமதுபுரிய கலையே நாடியிலோடவேதான்
ஆட்டமேதுக்குகற்றாய் கலையே யம்பலமாக்குவாயே
ஓட்டம்பிடித்தாயே கலையே யுள்ளறையில்வருவாய்
வாட்டமுனக்கேதுக்கு கலையே வாடாமல்வாடியிரு
உண்டுவுறங்கினையே கலையே யுலகஞ்சுற்றவேதான்
நின்றபலன்சொல்லுவாய் கலையே நிரும்பிப்பிறப்பாயோ
அண்டுவேதமுறையோ கலையே யறிந்துநீபார்த்தாயோ
கண்டுகொள்ளானந்தமே கலையே கண்களழியுமுனம்
பூரணமாகினின்றுங் கலையே பொய்தனிலேன்பிறந்தாய்
காரணங்கண்டோர்க்கு கலையே கட்டுப்பட்டாய்நீயுந்
தோரணங்கட்டிவிட்டு கலையே தொந்திசரியவிடு
மாரணஞ்செய்யாதே கலையே வந்துவுனைப்பிடிப்பேன்
சச்சிதானந்தமானாய் கலையே சர்வமயமானாய்
முக்சுடர்வட்டமானாய் கலையே மூடியேகண்திறந்துங்
குருவருளாலேவந்த கலையே கொடுப்பாரிங்கிலையோசொல்
அருளைப்பெறுவேனென்றுங் கலையே யறியாயோவென்னையுமே
சாஸ்திரமேதுக்கோசொல் கலையே சாமியுமாவதற்கு
வீற்றிருந்தாந்போதுமே கலையே வீணாகநீயலைந்தாய்
மாற்றலரிதோசொல்லுங் கலையே மாமதியுமானாயே
சோற்றுக்கலைந்துநின்றுங் கலையே சொல்லாமனியிறந்தாய்
வேற்றுமையேதுக்கடி கலையே வேணதவமிருக்க
காற்றையடைத்துநின்று கலையே கைமுறையாற்பிடியே
கண்டபேரில்லையோசொல் கலையே கணக்கதுதானுமுண்டோ
விண்டவர்கண்டிலையோ கலையே வேதப்படியோதாய்
கொண்டாடுமென்னுளத்தே கலையே கோதையரையழித்தே
விண்டர்டுவாய்வெளியே கலையே வீணுக்கலையாதே
மாடியறையும்வைத்தாய் கலையே மாணிக்கதீபமானாய்

காடியிற்பெருமானும் கலையே நம்பிவந்தோருக்கெல்லாம்
பூட்டைத்திறந்துவிடு கலையே பூமதியாலிருளை
காட்டைக்கடக்கவுமே கலையே கதிராய்ச்செங்கோலிருத்தி
மாட்டைமடக்கடியோ கலையே வந்துதில்லைப்பீடமாய்
கோட்டைக்குள்வையடியோ கலையே கோன்மதிகாலைத்தொட்டு
எறியும்பார்த்தேனே கலையே யேறுப்புரவியடி
மாறியேபோகவென்றாற் கலையே மாத்திரைப்போதுநில்லு
விரியோடிநின்றாயே கலையே விண்ணிற்றோன்றிமறைந்தாய்
கூறிபலிகொடுப்பேன் கலையே கும்பிட்டுரேசகத்தில்
ரேசகமேமறியே கலையே நிலைவாலெடுத்தனடி
ராசசிவயோகமாம் கலையே நாட்டிலரில்யாரறிவார்
இழுத்துமுழுக்கினார்கள் கலையே ரேசகமென்றுணர்ந்து
பழுத்தபழமாமோ கலையே பாராமலியுமாண்டாய்
பூரகமானரவி கலையே புத்தியுனக்கில்லையோ
சேரவிடுதலென்றுங் கலையே செப்பினாய்பொய்யாமே
மூச்சையடைத்தநின்றாற் கலையே முற்றுமோமோனந்தானும்
பேச்சையுகம்பலாமோ கலையே பித்தர்பிதற்றுமது
அண்டமாகினின்றாய் கலையே யகாரமறிந்தோர்க்கு
குண்டலிசத்தியைத்தான் கலையே கூப்பிட்டழைத்துவிட்டாய்
மண்டலமேன்சுற்றினாய் கலையே மதியேயுனக்கிருக்க
சண்டமாருதம்வீச கலையே சமயமும்பார்ப்பாயே
இந்துமதியாலே கலையே யெல்லையில்லாயோகமாம்
வந்துபிறந்தாயே கலையே மானிடரைத்தொலைக்க
நொந்துபோகவுமே கலையே நுணுக்கம்பார்த்திருநீ
யைந்துபூதமடி கலையே யறியாயோவுந்தனுக்குள்
சிந்துபாடியேநிற்குங் கலையே சிலம்பொலியுங்கேட்கும்
வந்துவுள்ளேநுழைய கலையே மாணிக்கத்தீபவொளி
ஆணிப்பொன்னம்பலமே கலையே யாடிவருங்காலைப்பார்
விண்ணிலேயேன்திரிந்தாய் கலையே வெட்டுபடப்போகின்றாய்
ஆணிலைபெண்ணிலையோ கலையே யறிந்துநீபார்த்தாயோ
தோணியதிலேறி கலையே தொகுத்துமேநீபாரு
உன்னைப்போனிகாண கலையே யுபாயமுனக்குவேணும்
முன்னைவினையைப்போக்குகலையே தன்னைப்போலாக்குமடி
காணுதமோனமிது கலையே கண்டுவுணர்ந்தாயோ
யாணுமிப்பெண்ணுமியுங் கலையே யலியாயும்வந்துநிற்கும்
என்னுதமென்னியல்லோகலையே யேழைமதியானாய்
அன்றுக்குக்குள்ளிருந்து கலையே யறிந்துமேபார்த்திலையோ

| | | |
|---|---|---|
| வின்னாளப்போவதற்கு | கலையே | வேதமதைபடிப்பாய் |
| கன்னாளவந்தோர்க்கு | கலையே | காட்சியுமெத்தவுண்டு |
| ஆறுசமயமடி | கலையே | யறிந்துபார்க்கவில்லையோ |
| மாறிமாறியோடுமே | கலையே | மார்க்கமதைப்பார்த்தாயோ |
| தேறிச்சமயம்பார்த்தோர் | கலையே | தில்லையின்கோவிலாவர் |
| ஏறிவழிபோக | கலையே | யேற்றநீபார்த்திலையோ |
| உள்ளேயொடுங்கிநின்றுங் | கலையே | யோங்காரமாகிநிற்கும் |
| பிள்ளையைபோல்வளர்க்க | கலையே | பேசுமந்திரமிதோ |
| சள்ளையென்றுபோகாதே | கலையே | சாமியுநீயுமாவாய் |
| கொள்ளையிட்டுப்பாரு | கலையே | வெள்ளையுமாகுமடி |
| ஆனந்தம்பார்த்தோருக்கு | கலையே | வானந்தவமாய்நிற்கும் |
| ஞானந்தானேதுக்கடி | கலையே | மோனமாய்நின்றோர்க்கு |
| ஈனமாய்ப்போகாதே | கலையே | யிறந்தும்பிறப்பிலையே |
| தானந்தவமாயிரு | கலையே | சச்சிதானந்தமாவாய் |
| கதியைப்பாராமற் | கலையே | கஞ்சாவபினிதின்றாய் |
| மதியதுனக்குமுண்டோ | கலையே | மத்தியிற்பத்திசெல்லே |
| விதியையறுத்துவெளி | கலையே | வேதசாரத்தைமூட்டு |
| பதியைக்காண்பாயே | கலையே | பரமரகசியந்தான் |
| நித்திரைபோவாயோ | கலையே | நினைவிலிருப்பாயோ |
| முத்திரைகம்பமடி | கலையே | விழித்துமேனோக்கிநில்லு |
| சித்தியாகுமிது | கலையே | சின்மயமாகிநிற்கும் |
| தத்திக்குத்தியோடினாற் | கலையே | சாமியின்சாபம்வருஞ் |
| சாமியின்சாபம்வந்தாற் | கலையே | பூமியுமாகாதே |
| ஆமிதுவேளையேவா | கலையே | யறியாமற்சாகாதே |
| காமியமேதுக்கடி | கலையே | கண்டார்சிரிப்பார்களே |
| பூமியைவிட்டுநீயுங் | கலையே | போய்ப்புகுதுமதியில் |
| கையால்வருமோகூத்தை | கலையே | கண்டாயோயில்லையோசொல் |
| மெய்யாலறியவருங் | கலையே | யுய்யாதபேர்க்குமில்லை |
| பொய்யாவிரதம்பூண்டு | ,, | பொன்னம்பலத்தைத்தேடு |
| அய்யனுந்தையலுமே | ,, | யானந்தமாடுவார்கள் |
| கண்ணால்மதியைப்பிடி | ,, | காணுஞ்சிவயோகம் |
| மண்ணாடிப்போகாதே | ,, | மாமதிதன்னைச்சேரு |
| அண்ணார்துபார்த்திருக்க | ,, | யறிவுனக்குவேணும் |
| தெண்ணார்துபோகாதே | ,, | திருட்டுத்தனம்வேண்டாம் |
| நாசியின்வாசலடி | ,, | நாதனிருப்பிடமாம் |
| தேசியைக்கொண்டுநீயுங் | ,, | தெரிந்துமேபார்த்திலையோ |
| மாசிலாமணியொளி | ,, | மாறிக்கால்தூக்கிநில்லு |

வீதிவெளியேறியே கலையே வெட்டவெளியாக்கு
வெட்டவெளியேறியே ,, யட்டாங்கயோகம்பாரு.
கிட்டயறிவுமுண்டு ,, கட்டையழியாது
முட்டமுட்டமுனையிற் ,, கிட்டநெருங்கிவரும்
வட்டமாய்வந்துநிற்கும் ,, வாழுஞ்சிவயோகர்
நாடியேன்வளர்த்தாய் ,, சாமிவேஷம்பூண்டாய்
ஆடியகாலையுந்தான் ,, யறியலாகுமோசொல்வாய்
தேடிப்பிடித்துநின்றேன் ,, சித்திரரத்னபீடங்
கூடியதில்வாடி ,, கூட்டுறவுசெய்வாய்
மூச்சாலேமோட்சமடி ,, நாட்டிலொன்றில்லையடி
பேச்சாலேதீர்ந்தாய் ,, பிரமமுனக்குயேது
வீச்சேதுக்குநீகற்றாய் ,, வீணாய்ப்புலம்பாதே
காச்சலாய்நீயிருக்க ,, கதிர்மதியாக்கவேணுங்
தூங்கிப்போகாதே ,, துக்கமுனக்குவுண்டு
ஏங்கியேங்கியேயிரு ,, யென்றறிவேதமிதோ
வாங்கிச்சுழிமுனையிற் ,, மாறித்தொடுத்துவிடு
வீங்கியேசோற்றுக்குநீ ,, வீணாகமாள்வாயோ
சோற்றுக்குப்பணிந்தாய் ,, வீற்றிருந்தாற்போதுமே
சேற்றிருந்தவர்களில்லை ,, பார்த்துநீவாராயோ
காத்திருந்தோரைக்கண்டு ,, கண்களிமையாதே
சேற்றிலேநட்டகம்பங் ,, சேருரவியின்பாகம்
இமையாநாட்டமதை ,, யிருந்துநீபார்த்தாயே
லமையாவானந்தமது ,, யடங்கவேயோர்நிலையாஞ்
சுமையாசுமையுமல்ல ,, தூங்காமற்சும்மாயிரு
உமையாளருக்கொண்டு ,, யூட்டுமமுதமது
அந்தரமாகிநிற்குங் ,, யகண்டவெளிகாணுங்
தந்திரமாகநில்லு ,, சாமியைக்காணவென்றாற்
சுந்தரச்சோதிமயங் ,, சோமனதற்குள்ளே
வந்துவுள்ளறையிலே ,, வாங்குஞ்சுழிமுனையிற்
கோபமேதுக்கடி ,, கொண்டாலானந்தமாமோ
தாபமுனக்குவேண்டுங் ,, சசிபாலமுர்தமுண்ண
சாபத்திற்போகாதே ,, சாமியருளைப்பெறு
பாபமுனைச்சுற்றியே கலையே பற்றியெரியுமடி.



## வி ண் ணி ல ா.

ஆதியும்வேதமடி விண்ணிலாவே நீயு
மமைந்தருளிலானுயே விண்ணிலாவே
சோதியுமூலமடி விண்ணிலாவே மெய்
தூண்டிநின்றபூரணமே விண்ணிலாவே
வீதிவிளக்கடியோ விண்ணிலாவே மறை
விந்துவிஞெளியில்வரும் விண்ணிலாவே
பாதிப்பிறையடியோ விண்ணிலாவே யுயிர்
பரமனருளானந்தம் விண்ணிலாவே
பூரணமாய்வந்தாயே விண்ணிலாவே யங்கே
புந்தியிற்சூக்குமமானுய் விண்ணிலாவே
காரணங்கண்ணிலருள் விண்ணிலாவே நீயுங்
காலமதியால்வந்தாயே விண்ணிலாவே
மூக்குநுனியடியோ விண்ணிலாவே கண்
முத்திரையாலீவந்தாயே விண்ணிலாவே
முச்சந்திவீதியடி விண்ணிலாவே மூலை
முப்பாழ்கடந்துநின்ருய் விண்ணிலாவே
கையிலருந்தவமே விண்ணிலாவே குரு
கதிர்மதியாலேநின்ருய் விண்ணிலாவே
மெய்யின்விளக்கடியோ விண்ணிலாவே முறை
வேதாந்தசாரமிதோ விண்ணிலாவே
முத்துமுகப்படியோ விண்ணிலாவே சுழி
மூலப்பதியமர்ந்தாய் விண்ணிலாவே
வட்டாரமாய்நின்ருயே விண்ணிலாவே வருங்
கற்பசமாதியானுய் விண்ணிலாவே
அட்டாங்கயோகமடி விண்ணிலாவே விண்
ணதற்குள்ளெடுத்தாடினுய் விண்ணிலாவே
முக்காட்டுக்குள்ளிருந்தாய் விண்ணிலாவே யிட
மூச்சையும்பிடித்தடைத்தாய் விண்ணிலாவே
எக்காலமுமுள்ளயென் விண்ணிலாவே பரி
யேகாந்தவெளியாய்வந்தாய் விண்ணிலாவே
காட்டிமறைந்தாயடி விண்ணிலாவே குரு
கைகாட்டவண்டநின்ருய் விண்ணிலாவே
பூட்டியெனக்குள்வைத்தாய் விண்ணிலாவே வெளி
புருஷரூபங்காட்டினுய் விண்ணிலாவே
ரேசகமதியானுயே விண்ணிலாவே நீயும்
பூசிதகுண்டலியானுய் விண்ணிலாவே

ஆசையறுத்துநின்றாய் விண்ணிலாவே வாசி
யடக்கியோரும்பகமானாய் விண்ணிலாவே
பூரகம்பவிக்குள்வந்த விண்ணிலாவே யறை
புருந்துக்கலைமாறினாய் விண்ணிலாவே
முத்திரைகம்பத்தில்வந்தாய் விண்ணிலாவே வந்து
மூன்றுலகமாய்நிறைந்தாய் விண்ணிலாவே
கத்தரிக்கோன்மாறல்தா விண்ணிலாவே வாசற்
கதவைத்திறந்தநீயே விண்ணிலாவே
வருதவேற்றமடி விண்ணிலாவே மிக
வேற்றியுமான்பார்த்தேனடி விண்ணிலாவே
மாறுக்கவலைவைத்தேன் விண்ணிலாவே யென்னை
மறியாவிளக்கவைத்தாய் விண்ணிலாவே
கூறுப்பொருளிதுவே விண்ணிலாவே நாளை
கூற்றனணுகாமற்செய்த விண்ணிலாவே
பூசைபுரியுமறி விண்ணிலாவே நீயும்
புருந்தலைக்குள்ளிருந்தாயே விண்ணிலாவே
ஆசையும்பாசமடி விண்ணிலாவே பெரு
மகண்டமாம்வெளியானாயே விண்ணிலாவே
கன்றொளியில்வந்தாயே விண்ணிலாவே கரு
காறுதிருளறையானாய் விண்ணிலாவே
வெண்ணிலாமுற்றமடி விண்ணிலாவே யங்கே
வேணமதியுமானாயே விண்ணிலாவே
அண்டம்பூரணமானாய் விண்ணிலாவே நீ
யதிலிருசமாதியானாய் விண்ணிலாவே
பிண்டத்திமலடுத்தாட்டினாய் விண்ணிலாவே நிறை
பேசாமோனமானாயே விண்ணிலாவே
விடயங்கள்செருப்பாறனாய் விண்ணிலாவே நீயும்
விறுமயிர்ப்பாலமானாய் விண்ணிலாவே
தடையறவேநின்றாயே விண்ணிலாவே மதி
சாமிகுருவாய்வந்தாயே விண்ணிலாவே
தில்லைசிதம்பரமானாய் விண்ணிலாவே ரவி
சித்திரக்கூத்தாடிநின்றாய் விண்ணிலாவே
அல்லலைநீக்கியருளாய் விண்ணிலாவே தெரு
வதிர்துமறியாமனின்றாய் விண்ணிலாவே
பார்க்கவெளியானாயே விண்ணிலாவே நீயும்
பரஞ்சோதியாய்நின்ற விண்ணிலாவே
நிர்க்கமாய்கம்பமுனை விண்ணிலாவே நிதஞ்
சின்முத்திரையுமானாய் விண்ணிலாவே
சேர்க்கரவியுமானாய் விண்ணிலாவே பதி
சிறுவாசலுட்புகுந்தாய் விண்ணிலாவே

மாடமாளிகையாகுய் விண்ணிலாவே வரம்
வந்துலைககாட்டிநின்ருய் விண்ணிலாவே
பாடகமெனக்களித்தாய் விண்ணிலாவே வெளி
பறந்துதாகுகிநின்ருய் விண்ணிலாவே
காலையில்மதிபிடித்தாய் விண்ணிலாவே நிலக்
கண்ணகத்திருத்திநின்ருய் விண்ணிலாவே
மாலையமுர்தமுண்டாய் விண்ணிலாவே யொரு
மதியில்லாமற்செய்தாயே விண்ணிலாவே
ஈராறுகாலடியோ விண்ணிலாவே வாசி
யிருகாலைகட்டிநின்ருய் விண்ணிலாவே
ஓரார்தலந்தனிலே விண்ணிலாவே மதி
யொருகாலைத்தூக்கிநின்ருய் விண்ணிலாவே
நஞ்சிருந்தபாம்படியோ விண்ணிலாவே கெதி
நாதனிருப்பிடமாம் விண்ணிலாவே
பிஞ்சிலாளாக்கிஞயே விண்ணிலாவே யெனை
பின்னையும்வரச்செய்தாயே விண்ணிலாவே
பூரணையிற்பொருந்த விண்ணிலாவே தவம்
புகழ்ந்தமாவாசிதொட்டும் விண்ணிலாவே
காரணக்குருவாய்வந்த விண்ணிலாவே வலக்
கண்ணிற்சோதிகாட்டிநின்ருய் விண்ணிலாவே
உற்றுப்பார்க்கும்வெளியில் விண்ணிலாவே யொரு
வோங்காரபீடமாகுய் விண்ணிலாவே
கற்றறிந்தென்னபலன் விண்ணிலாவே யெனை
கண்டவர்சிரிப்பாரடி விண்ணிலாவே
முட்டாக்குயேதுக்கடி விண்ணிலாவே நீயும்
விழித்துமேபார்த்திருந்தால் விண்ணிலாவே
காட்டவேகைக்குருவால் விண்ணிலாவே தினங்
கண்டுபசியாறிநிற்பேன் விண்ணிலாவே
இறக்கவுநீவந்தாயே விண்ணிலாவே மாறி
யிடகலையைத்தூக்கிநின்றேன் விண்ணிலாவே
மறக்கவும்போகேனடி விண்ணிலாவே அந்த
மறியைவலமாக்கிநின்ருய் விண்ணிலாவே
கூடவென்னிடமிருந்தாய் விண்ணிலாவே பெருங்
கூட்டினிலகப்பட்டாயே விண்ணிலாவே
வேடமெடுத்துநின்ருய் விண்ணிலாவே வானம்
வெட்டுப்படாச்சக்கரமே விண்ணிலாவே
கற்பமேநீயுமாகுய் விண்ணிலாவே யீரார்
கலைமதிபெருமாகுயே விண்ணிலாவே
முற்பொருளடக்கமாகுய் விண்ணிலாவே யங்கே
மூலப்பதிநின்ருயே விண்ணிலாவே

ஆனிளிற்பென்றுமாறும் விண்ணிலாவே பின்று
மாவுவிகை.ர்திண்டிறும் விண்ணிலாவே
தோணியதற்குள்ளாறும் விண்ணிலாவே மெய்த்
துரியங்கடந்துநின்றும் விண்ணிலாவே
முதற்புமியோகமாறும் விண்ணிலாவே யுள்ளே
முத்திபுமளித்தாநின்றும் விண்ணிலாவே
அதற்குளதிசயமும் விண்ணிலாவே யா
னம்பிகையின்பீடமாறும் விண்ணிலாவே
காற்றும்ப்பறந்தாயோடி விண்ணிலாவே நீயுங்
கண்மூடிமோனமாறும் விண்ணிலாவே
சோற்றுக்குநியலேர்தாய் விண்ணிலாவே யெனை
சுக்கான்திருப்பிவிட்டாய் விண்ணிலாவே
மண்ணிலிறந்துபோக விண்ணிலாவே யுன்
மதிகெட்டுப்போனதென்ன விண்ணிலாவே
எண்ணப்படியிலசையும் விண்ணிலாவே சசியா
லென்னுயிருனக்களிப்பேன் விண்ணிலாவே

---

## கதிர்மதிபெருமை.

ஓங்காரகம்பத்திலே கண்ணேயென் கண்ணே
யொன்பதுவாசலுக்கெனக் கண்பதாய்வந்தாய்
பாங்கானகம்பத்துச்சி கண்ணேயென் கண்ணே
பரமனருளுககுகந்த கண்ணதாய்நின்றும்
வாங்காச்சுழிமுனைக்குள் கண்ணேயென் கண்ணே
வாசலைத்திறக்கவு மதியுமேயாறும்
ஆங்காரகோபமெல்லாங் கண்ணேயென் கண்ணே
யடக்கியேமதிபிடித் தொடுக்கியேயாண்டாய்
காலைகட்டிநாலையேற்ற கண்ணேயென் கண்ணே
கதிர்மதியுநீயுமாகக் கம்பத்தேறியே
வாலையாகவரவுங் கண்ணேயென் கண்ணே
வார்த்தையெனக்களித்து வாசலுள்ளாறும்
மாலைகட்டிரவியாற் கண்ணேயென் கண்ணே
மதியைபதிலேயும்வைத்து வானத்தினின்றும்
சோலையிலொளியாய்வந்தாய் கண்ணேயென் கண்ணே
சுந்தரமாய்ச்சோதிமயந் தாண்டியேநின்றும்
மாயவலையிற்சிக்க கண்ணேயென் கண்ணே
வாசியையதிலிழுத்தவ் வார்த்தையழித்தாய்
காயம்வலுத்திருக்க கண்ணேயென் கண்ணே
கலைமதியுங்கற்பமாறும் கண்ணூலருந்த

வாயனதிலிருக்கக் கண்ணேயென் கண்ணே
வமைத்தாயேபூரணத்தி லவ்வுமுவ்வுமாய்
உபாயம்வைத்துப்பூசைமதி கண்ணேயென் கண்ணே
யுருக்கத்துடன்கலந்து லூமையுமாகுப்
வீட்டிலேந்துபூதமாகக் கண்ணேயென் கண்ணே
வீதிவைத்துபாதிமதிகோவிலுமதாய்
கூட்டிலேலேநீமூச்சுமாகுய் கண்ணேயென் கண்ணே
கோவிலுக்குள் மணிவைத்துக்கும்பகமாக
வாட்டிமனதொடுக்கி கண்ணேயென் கண்ணே
வாழ்மதிதனைப்பிடித்து மோனமேயுற்றாய்
காட்டிக்கண்ணைமறைத்து கண்ணேயென் கண்ணே
கலைநழுகவிடச்செய்து கானகஞ்சென்றாய்
மாளாப்பிறவியெடுத்தாய் கண்ணேயென் கண்ணே
மாண்டுமாண்டுமீண்டுவந்து மண்ணிற்பிறந்தாய்
ஆளாகிப்போவதற்கு கண்ணேயென் கண்ணே
யாயிரத்தெட்டிதழ்க்கமல மம்பிகையாகுய்
நாளாகிப்போகுதே கண்ணேயென் கண்ணே
நாளைவருமெமனுக்கு நானென்னசெய்வேன்
கோளரவந்தீண்டாமற் கண்ணேயென் கண்ணே
குறுக்கேமயிர்ப்பாலம்போட்டுக் கூப்பிடுமெனை
தில்லையைக்கண்டபேர்க்கு கண்ணேயென் கண்ணே
திரும்பிவரவேதுவுண்டோ திண்ணமாய்ச்சொல்லு
கல்லைக்கரைத்துருகுங் கண்ணேயென் கண்ணே
கண்டுபசியாற்றிநின்று கண்குளிருமே
வல்லயென்றாலும்வருவேன் கண்ணேயென் கண்ணே
வரத்தையும்பிடித்திழுத்து மையமாகுவேன்
எல்லையைக்கடப்பேனடி கண்ணேயென் கண்ணே
யேகவெளியேறிநின்று மோகங்கடப்பேன்
கையாக்கனியருந்தி கண்ணேயென் கண்ணே
கசடறுத்துக்கலைதனிற் காரணமாகுய்
மெய்யருந்தக்கையின்முறை கண்ணேயென் கண்ணே
மேல்வாசலைத்திறந்தும் விண்ணுமேயாகுய்
அய்யாகையாலளித்த கண்ணேயென் கண்ணே
யாச்சரியந்தோன்றுமடி பாய்ச்சலில்லாதாய்
வையாமல்வைத்திரடி கண்ணேயென் கண்ணே
வனபூசைபோட்டுநின்று வானமாகுவேன்
காத்திருந்துகேட்டவர்க்குக் கண்ணேயென் கண்ணே
கண்ணகநிலத்தைவைத்துக் காணவுநின்றாய்
பார்த்திருந்தறியாயோ கண்ணேயென் கண்ணே
பதியில்வந்துவுன்னையுமே பார்த்துப்பிடித்தேன்

வேர்த்துமுகம்வாடியே கண்ணேயென் கண்ணே
வெளியொளிதானுமினின் வுடியும் விடுபுகுந்தேன்
சேர்த்தென்முகங்காட்டுவாய் கண்ணேயென் கண்ணே
திருப்பெருந்துறைக்கப்பாலே திண்ணமாகச்செய்
துருருவாய்நீயும்வந்தாய் கண்ணேயென் கண்ணே
யொத்திருந்துசித்ததிலே வைத்துமேயாண்டாய்
கருருவாய்நின்றவிடங் கண்ணேயென் கண்ணே
யிருளகற்றிப்பூரணத் திருந்துஞ்சமாதி
மூவுருவாய்முச்சுடராய் கண்ணேயென் கண்ணே
மூலப்பதியேறிநின்று காலனறவே
வேருருவெடுப்பாயடி கண்ணேயென் கண்ணே
வீதிசுற்றிப்பாதிமதி யோதிவருவேன்
வட்டமாய்வந்துநின்றாய் கண்ணேயென் கண்ணே
வானமதிபானம்பண்ணை வந்தும்வெளியாய்
திட்டமாயோகத்தமர்ந்தாய் கண்ணேயென் கண்ணே
தில்லையெல்லாங்கொள்ளையிட்டுத் தேனெழுகவுந்
தொட்டவுடன்சோதிதட்ட கண்ணேயென் கண்ணே
சுந்தரப்பாலனெனக்குட் டுண்டவேநின்றாய்
விட்டாலும்விடுவேனோடி கண்ணேயென் கண்ணே
மெய்யனருள்கையின்முறை வையோகோபோவேன்
நாதமணியோசைகேட்க கண்ணேயென் கண்ணே
நாடியோடிவாடிநின்றுங் கூடமதனில்
வேதம்பாடிநிதயாடி கண்ணேயென் கண்ணே
வேணமதிகாணவுமே தோணவும்வந்தாய்
போதம்வந்துமேநிலைக்க கண்ணேயென் கண்ணே
பொழுதைரவியாலேகாட்டு போய்ப்புகுதுவேன்
மாதம்பத்துநாளைக்குள்ளே கண்ணேயென் கண்ணே
மதியோகத்திலமர்ந்து வாழ்வாயேநீயும்

---

## ஞானச்சிந்து.

சுந்தரச்சோதிமதியின் சந்திரவிடகலையே
தூண்டிநின்ற பூரணத்தைப் பாராய் அதி
லாண்டவ னருளிருக்கு நேராய்

தூக்கத்துடன்போகாதேநீ யேற்காதடிபுத்தனுக்கு
தூக்கிவைத்து மெல்லடியைத் தாக்கு வதி
வாக்கவே மனதடக்கிப் போக்கு

சோமன்மதியைப்பிடிக்கக் காமியங்களையுநீக்கி
துடர்ந்துப்பிடித் தடர்ந்தவனம் போக்க வங்கே
படர்ந்துவருங் கொடிகளையு நீக்க

சொக்கர்திருவாசலது வெப்போதுந்திறந்திருக்கு
சோம்பல்செய்யா தேடியெந்தன் கண்ணே யிப்போ
சாம்பவியைக் காட்டுவேன்வா விண்ணே

தோகைமயிலாளேயிதோ பாகமதாயோடிவாநீ
சுழிதிறந்து காட்டுவேன்வா முன்னே யுன்னை
பழிகள்வந்து சூழாமலே சொன்னேன்

சோடிப்புருவைப்பாரடி வேடிக்கைகாட்டிநிற்குதே
தேடியலையாமலேநீ வாடி யிதோ
மாடியறைக்குள்ளிருக்கும் போடி

தொட்டவுடன்சோதிதட்ட பட்டணஞ்சாமிகாட்டுவேன்
துணையுடனெனக்கிருந்து காரு வந்
தனைவோர்களுனைத்துதிக்கச் சேரு

சோருதடியெந்தனுவி யாறுதெருவீதிகண்டு
தூண்டாமணிவிளக்குமங் குண்டு நிலை
தாண்டவமாடுமேயதைக் கொண்டு

தூயவெளியேறிப்போக வுபாயவழிதோணுமடி
துணையற்றிருக்கலாமே. மாகாயஞ் சுழி
முனைபெற்றிருக்கவுமே சகாயம்

வந்துவந்துநீபிறந்தாய் விந்துவாலேகெட்டகுடி
வாழ்ந்திருந்துமென்னபலன் கண்டே யது
ஆழ்ந்துபோயிறக்கவுமே கொண்டே

வள்ளலருளுள்ளேயிரு பள்ளத்தில்விழுகாதேநீ
மெள்ளவேயுனையிழுப்பேன் பின்னே பெருங்
கள்ளமனதையும்போக்கு முன்னே

வாய்க்குமிதுவேய்க்காதடி பேய்க்கருத்தையுமோதாதே
வஞ்சகத்தைநீயறுத்து மாருய் இப்போ
தஞ்சமென்றுவந்தோமென்று கூருய்

## தெம்மாங்கு.

வரமேயிருக்குதடி கரமேலாணிருக்கு
சிரமேல்முனைநோக்கு சிற்றடியைப்பெற்றகண்ணே

தூக்கிவைத்துமொருகாலே தாக்குமதிசாலேதனிற்
றொட்டிமுப்பாரேயுனையு மையன் அப்போ
நிட்டிவாசற்றிறக்குமே குய்யஞ்

சோலேயொளிவீசமடி பாலேவனத்தைப்பாரடி
சோதிமுதற்பூமியோகம் பாரு விது
வாதிகுருவாலமைத்த சீரு

தொங்கலிட்டபூரணமுந் திங்களாயுங்காட்டிநிற்குந்
தோப்பிலேராயனும்வரு வானே சீர்
மாப்பிள்ளேயுனக்கேற்றவன் மானே

## தெம்மாங்கு.

மானேகேள்மாமதியை மந்திரமில்லாப்பிடித்து
தானேதானுருமடி தையலேநீயஞ்சாதே

அஞ்சாதேநீரென்றுரைத்தீர் பஞ்சமாபாதகரிக்கு
மாணேசொல்லுநானும்வரு வேனே யங்கே
வீணேவாசித்துக்காட்டும்போ வேனே

யாறுபெருகிபோகுதே யேறுதற்குமோடந்தாரு
மையனுனக்கும்பிடுவேன் மெய்யா வதிற்
பையரவமேபொசுங்குந் துய்யா

வாசராயுசமுடிவோ கடற்பெருகியோடுகிறதோ
வானந்தப்பெருக்கோவிதி யறியேன் நல்ல
தானந்தானிதற்குமதி தெரியேன்

## தெம்மாங்கு.

மதியறியாப்பெண்ணேநீ விதியறியவாராயோ
பதியைவிட்டுபேசாதே பாவையரேமோகம்வேண்டாம்

மோகவிருளெனக்கிருந்தால் முத்திதைத்தேடுவேனோநான்
வேகமாய்மதிபிடித்துத் தாரும் அதிற்
சாகாநிருக்கவாத்தைக் கூறுஞ்

சச்சிதானந்தமென்று முச்சந்திவீதியில்வந்துஞ்
சாத்திரம்பொய்போகாமலே சேரும் ஒரு
மாத்திரைப்போதுமதியி லேறும்

வாத்தைப்பிடித்துவாங்குமே யாத்தைக்கோடுமேதூங்குவே
ளுசையற்றுப்போகவிழி பார்ப்பேன் நான்
மாசறக்குண்டலிமதி சேர்ப்பேன்

## தெம்மாங்கு.

மதியெனக்குப்போருதென்றீர் ரவியும்வந்துநிற்குதோ
மதியிருந்தால்ரவிவரவும் வாசமறிவீரோசொல்லும்
அறிவிருந்தாற்போதுமடி யாசையற்றநீயிருப்பாய்
பரிதிமதியைப்பிடித்துப் பாராய் நீயுஞ்
சுருதிமுடிவாமிதுவே சோராய்
கள்ளமனதேயகற்று வெள்ளைகாட்டுதேபாராயோ
சள்ளையில்லாதில்லையைநீ காணவா யங்கே
கொள்ளையென்றுசொல்லியுனைத் தோணவா
ஞானம்வேண்டுமானால்பெண்ணே மோனத்தைநீபார்த்திரடி
தேனொழுகும்வானமூர்தப் பானு வனு
தானேவெளிபோவதற்கு வேனு

## தெம்மாங்கு.

வேனுநிறுத்தியங்கே விண்காட்டிகண்களிக்குங்
கானுமேலேற்றிநின்று காத்திருந்தாற்போதுமடி
காத்திருந்துவீற்றிருக்கக் கண்ணிருந்தாற்போதுமையா
சேர்த்துமெனையொன்றாக்கியே சித்தாய் அது
கோர்த்தமணிபோலவுமே முத்தாய்
கோடிரவிகாணுமையா வேடிக்கையும்பார்த்திருப்பேன்
கூச்சமற்றிருக்கவாந்தாரும் அந்த
பாய்ச்சலோடுங்கப் பாழும்போகும்
பாருமையோநேருதிதோ கூறுமயிர்ப்பாலமிது
பரவெளியில் யேகனுகிப் போகும் வாசி
சாமறுத்துப்பூரணமே யாகும்

## தெம்மாங்கு.

பூரணத்திற்குள்ளிருக்கும் புண்ணியமெனக்குவுண்டு
காரணத்தைப்பார்க்கவுமே கண்ணெனக்குப்போதுமையா
கண்ணெனக்குபோதுமென்ற கலைமதியேநீயுங்கேளாய்
கைலாயக்குண்டலியது வாசம் அதிற்
பொய்யிலாப்புகுந்தருள்விஸ் வாசங்
காணுமவ்விபூரகமுமானும்பெண்ணு மொன்றாய்ப்போகுங்
கைலையிலிருக்கவிது நேரஞ் சுத்த
மெய்தனையறிந்தவர்க்கு வீரம்

## தெம்மாங்கு.

வீரசிகூறுதே வீற்றிரடிசேத்திரத்திற்
காரசாரங்கொடுத்துக் கதிர்மதியைப்போற்றுவாய்நீ
போற்றிநின்றவுட்புகுந்தேன் பொன்னம்பலங்கோவில்கண்டேன்
வீற்றிருந்தாற்போகுமதி வீடும் அசை
காற்றிலாகும்பாசமடங்கத் தேடுங்
குருக்களதிலேயிருப்பார் பெருக்கவேபேரின்பமாக
பித்தனவன்மெத்தசுடு காடு போனாற்
கர்த்தனெனைக்கூப்பிட்டன்னை யோடு
கலந்துருகிமனதுவந்து மலர்ந்தவிழிதீபங்கண்டு
கனகசபைகூத்துமதி லாடும் நிதம்
மனமிறந்துசேர்ந்துவுற வாடும்

## தெம்மாங்கு.

வாசம்பொருந்திநின்றார் தேசமெங்குமேவீசும்
யாமதியாலெனக்கு சோமசுந்தரங்குருவாம்
விதியறுத்துவெளியிலேதான் வேதமேபிரமமுனக்காய்
கதியடையமதிரவியு முற்றுங் கண்ணே
பதியில்வைத்தாற்றியதுவும் பற்றும்

---

## ஞானச்சிந்து.

### வேறு.

வாசியால்மதி யேறியயோகனே
வந்தருளுங்கதி யோகா நீயுஞ்
சுந்தரச்சோதியின் பாகா மறை
வள்ளலேயருளுன்னமுக்குளிர்ந் தெள்ளமாமறுங் கள்ளமின்றியே
வானவர்புகழ் ஞானமாமதை
வாங்கவருளுப தேசம் அடி
தாங்கியவைபிர காசம்
பன்னியாலுதித் துன்னத்திலேவந்து
பாசத்தையும் படைத் தாயே யென்னைத்
தேசத்திலு மமைத் தாயே யான்
பார்த்துமேவெளி திறந்துபோகவு மறந்துமாமதி யிறந்துறும்படி
பார்க்கஞானக் கரத்திலேநீயும்

பண்புடன் கண்ணில்லைப் பாயே யந்தத்
துன்ப மகன்றிடச் சேயே

காலிலேறியே பாருமுனைதனில்
கம்பத்திறுச்சியின் மேலே யிப்போ
பம்பரத்தாற் பிடி நாலே யிதோ
கலைகளாகியா லலையிலாதிடங் குலைகள்செய்துமே தலையிருப்பிடங்
காட்டிடாதருள் புரியவுமேயெனக்
காதலறுத்துவாய் நீயே யிப்போ
வோதக்கருத்துகொள் வாயே

ஆடியகலை யோடியாதனே
யந்தரமாய்வெளி நிற் பாய் நீயுஞ்
சுந்தரனுக்கருள் வைப் பாய் அரும்
பாவியாகிய தேவிபூசையுந் தூவியேயரு ளாவிவந்தடு
வங்கமேனியைத் தங்கயதாக்கியு
மார்க்குமுவந்தவிசு வாஸன் நீயு
மேற்கவுமேசொற்பிர காசன்.

---

## ஞானச்சிந்து.

### வேறு.

மூலமதிற் சோதியேநீ யாதிகுரு வாலேதேடி
முச்சுடருதயமதை நாடி யுற்
றச்சுடர்சமாதியேநீ கூடி யொரு
வோலமிட்டடி காலனற்றுற பாலமிட்டெடு சீலமுற்றிட
வோங்கியே கம்பத்துச்சியில் வாடி மிகத்
தேங்கியேநீயு நின்றுமே கூடி
சொன்னமொழி யொன்றுளது கண்ணினிடை மையமதிற்
சோதிமதி பூரணமுந் தோன்றியே யொரு
பாதிமதி தேயவுமே வூன்றியே கலை
சோரவந்திரு நேரங்கதிரதிற் பாருமதியிடை பூரகந்தனிற்
சோர்ந்துவிடுரேசகந்தி லுன்னியே தொட்டுப்
பாய்ந்துமேமதிபிடிக்கப் பன்னியே
உப்பைக்காணவப்புவினுல் முப்புமுண்டுவூனவிண்டு
வுபாயத்தாலூசிமுனையி லேறியே வதா
யாயமில்லைவாசியதைக் கூறியே நீயு

முற்றுப்பாருமே நெற்றிநேர்விழி பற்றுமேயது சுற்றுமேமதி
ஊன்றியுமுடல்வெறுத்து மாறியே கண்
ணுறுத்தவெளெருத்துமதில் ஙிறியே

வெளியிலேற வொளியில்மாறி விசிவருங்காலைப்பிடி
வெட்டுப்படாசக்கரத்தைப் பிடிக்குமே யது
கட்டுப்படாதச்சுமட்டடக் குடிக்குமே கதி
ராக்கவுயிரு நீர்க்கமாயதி நேருக்கவும்பயி ராக்குமேயதி
னுட்பமென்று நீநினையா நடிக்குமே யிந்த
வற்பவுடலிற்சிக்காது வெடிக்குமே

சாரிசாரியாய் வருகுமது மாறிப்போக வழியறியா
நாரியர்மயக்கமது தானே நீயுங்
காரியங்கண்ணில்லைவைத்துமே „காணே யறிற்
காவலாயிரு கேவலத்தனி லாவலோடுற மூவருமதி
மூாயிரத்தெட்டிதழ்க்கமலம் வானே மூலத்
தாயிருந்ததிலேவாமுந் தேனே

கஞ்சாவபின் மதுக்குடித்து கலங்கிநின்ற மூடர்களே
தஞ்சாவூராளுமுன்மக ராசன் பெரு
வஞ்சகத்திருள்ளிருக்கு நேசன் கலை
மதிலையடுதிலே கதியிலேயருள் விதியைநிறுத்தி பதியிலேயிரு
மாமதியின்யோகமிது வாசன் நீ
வாமம்வைத்துப்பூசைபண்ம யேசன்

வேஷமிட்டுவெளியினின்றுய் வெட்கங்கெட்டசண்டிமாடே
ரோஷமுனக்குண்டோநூலைப் பாரு மதை
சேஷநினைத்தானரகந் தேரு மிக்க
தெரியாதோஇது மரியாதையிலா பரிமாறியுநீ கரியோன்வரத்தை
வாங்கவரம்யான்கொடுப்பேன் சேரு சற்றுந்
தூங்காமலிகாத்திருந்து நேரு

துரியமுடலிக்கவ்வந்து பரிதருவேனேவாங்குங்கள்
துக்கத்துடனேயிருந்து சாகாதிர் யிதோ
பக்குவவறையிருக்கு போகாதிர் மறை
அண்டவேசட ராண்டவரதில் வேண்டவுமதி தாண்டவம்புரிந்
தாடுமேசடுகொட்டிநபோய் வேகாதிர் வலம்
வாடுமேமதியைவிட் டேகாதிர்



## ஞானச்சிந்து.

### வேறு.

ஆறுதெருவி லடியிலேறிநின்ற வையனேசற்குருவே யென்
னகங்காரச்சுவரை யழித்துவெளிகாட் டழைத்துவந்தவுருவே

மாறியிடகலை யேறிப்புகுந்தயென் மாமணிகோபுரமே யந்த
மந்தமதியினூற் சொந்தவிந்துவினில் வாங்கிவந்தவரமே

கங்கையாடியுநீ கண்ணிலருட்காட்டி கலையாலெழுஞ்சோதியே பெருங்
காலிற்சிலம்பசை யக்கருணாகரா கைகாட்டுமென்வீதியே

பெண்களரவங் கடியாதறச்செய்து பேரின்பத்தையுமோட்டி நீயும்
பேசாதஞானத்தைப் பேசவைத்தாயேநீ பித்தனாகவேவாட்டி

வாசியின்மையத்தில் ரேசித்துத்தேசிக னாகியேநீயும்வந்தா யங்கே
வான்மதியேறியும் பாலொளிகாட்டியே மாசில்லாதேயமர்ந்தாய்

சித்தாடவொத்தாடும் நித்யகல்யாண சிதம்பரமானவனே சிவ
சின்முத்திராங்கமாய் கன்னிவாசற்புகுந் தேடியேகாலகனே
கல்லாலின்கீழினில் நால்வருக்குமேநீ காட்சியுந்தந்தவ ரென்
கண்ணகத்திருத்தி விண்ணிலொளிகாட்டி கான்மலையினின்றீரே

சொல்லாமோனப்பொரு ளெல்லாமுனக்கு தொந்தமதாயிருந்தாய் பசுந்
தோகைமயிலாள் மயக்கத்திற்போய்விழுந் தொண்டுசெய்யப்புரிந்தாய்



## ஞானச்சிந்து.

### வேறு.

சித்திரத்தின்கூடத்தின் பள்ளியே மதி
தேனூறுகும்ரவி யள்ளியே யருண்
முத்திக்குநீபலக் தெள்ளியே யொரு
முகம்வாடிட வகமேயுற செகமீதினி லனுகாவெனை
மோனசிகாமணி துள்ளியே விழ
வான்மதியும்வந்து கொள்ளியே
வானத்தினின்றுமே சொலிக்கவே நாதம்
வழங்குதேயென்னகங் கெலிக்கவே யது
வையகமுழுதும் பலிக்கவே கல்
வடவாலினிற் சனகாதியர் தினமேவிய வுமைபாலருள்
வந்துநின்றுடிச் சலிக்கவே யந்த
வாழ்மதியாலரு ளொலிக்கவே

வாடியிருக்கவும் வரையுமே யிந்த
நாடியிலிருக்க வுரையுமே சொந்த
கோடிரவியொளி திரையுமே நிதங்
குருபாதமே வெளியாகவே யருளோதியு முருவாய்வெளி
கடச்சமற்றிருக்கக் கரையுமே யில்லா
பேச்சுமூச்சில்லாத விரையுமே

சித்திரமண்டபந் தெரியவே யொரு
சுத்தரிக்கோன்மாற லெரியவே பரம்
பற்றித்தினத்தினம் பரியவே யனு
தினமேவிய கனமாமொரி மனமீதினி லினமாகநின்
ச்தளமபிபூட் டுரியவே வரந்
தேசிகன்கையிரு லரியவே

டச்சிதமாம்பள்ளிக் கோட்டையே யதி
லுயர்ந்தசிங்காரமேடை பாட்டையே நீயுங்
குச்சிபோட்டுத்திறவும் நாட்டையே குரு
கொடுகாரண பரிபூரண னெறியாயிரு குறிபார்த்துளங்
கொஞ்சர்தபவுவைத் தூட்டையே யுனைத்
தஞ்சமென்றடைந்தேன் காட்டையே

இப்பிறவிமாற்று முண்மையே குரு
விசைந்தவுபதேச நன்மையே ஞான
மற்புதமாங்காட்சி வெண்மையே நிறை
யானந்தமாய் வானந்தனில் மோனந்தமாந் தானென்றது
வாக்கைவலுத்திருக்கும் வாண்மையே யது
சேர்க்கையில்லாதிடம் பான்மையே

---

## ஞானச்சிந்து.

### வேறு.

சிதனமதி யாலுணர்த்திய தேகனே
விடையோகனேயுமை பாகனே செந்
நிலையக்காணமதி வாயல்பாயச்செய்யுந் தியாகனே மதியோகனே

பூரணந்தனி லேயுதித்துவரும் புண்ணியா
மிக கண்ணியா னை யுண்ணியா வெகு
பூரகரவி யாலேகிடைத்தரு ளெண்ணியா மிகப்பண்ணியா

பார்க்கவுஞ்சுழி முனைதனிலேறிடும் பள்ளியே
யென் கொள்ளியே புனை யள்ளியே வெளி
புரையிலேகிடைக்குந் திரையைத்தூக்கியு மள்ளியே மனந்தெள்ளியே

ஆதியாமருட் சோதியாலமைந் தய்யனே
குரு மெய்யனே நீர் துய்யனே யிந்த
ஆகாமதிதனை பாகம்ரவிதனி லய்யனே யிலைசெய்யனே
கும்பகத்துக்கு ளம்பலத்தாடுமனு கூலனே
சிவ லோலனே மதி சீலனே வருங்
கொடுமையையறுத் தடுமையாக்கிய கோலனே மயிற்பாலனே
தில்லைவழியி னெருப்பார்கடந்தசெந் தீசனே
நடராசனே பிர காசனே பெருஞ்
செப்புமோனத்திலே யப்புவைமூட்டிய நேசனே யருள்வாசனே

---

## ஞானச்சிந்து.

### வேறு.

பள்ளியைக்காணவரும் பாதஞ் சத்தி
பகர்மதியேறினல்நீ போதம் வரும்
பாதிமதியைக்கண்டு போகப்பன்னிரண்டு
வேதம் வெகுநாதம்.

ஒள்ளியவழற்கண்வீசு மோடி மதி
யொருகாலைத் தூக்கிநிற்கும் வாடி யென்று
மூதுவிடகலையி லோதுஞ்சாம்பவியைத்
தேடி மிகநாடி

சங்குமுழங்கத்தொனி பாதை நல்ல
சாமிவரவுமிது போதை யொளி
சார்ந்துபாயுமறி மாய்ந்துபோகுமதி
வேதை யுடன்றாதை

திங்களொளிபரவி கூடும் மதி
யங்கையிருளறவு மூடும் நீ
தேங்கித்தேங்கிநின்று வாங்குசுழிமுனையி
லோடு முறவாடும்

பள்ளிக்குகந்தவன்னி வாசி நிதம்
பறக்குமடியொளியும் வீசி நிறை
பானுந்தோன்றிவருந் தானுந்தானுமென்று
தேசி முனைவீசி

துள்ளிப்போகுமனதைக் கூறி யுயிர்
துணையாயிருக்கவுமே வீறி நீயுந்
தூண்டிப்பூரணத்தை வேண்டிநின்றுபிடித்
தேறி வாசிமாறி

தில்லைச்சிதம்பரத்தின் கூத்தே யங்கே
தீபவொளிவினது மாத்தே மறை
தேடும்வாதமிது பாடுபட்டுமதிச்
சேர்த்தேரவி கோத்தே

மூலப்பதியில்வாழு மீசன் அவன்
முத்திக்குகந்தவிசு வாசன்
மூவிரண்டோான் கேறவிரண்டுசேர்
பாசன் பிரகாசன்

---

## கீர்த்தனைகள்.

விருத்தம்.

தனக்குளருள் வேறுமென்றாற் சசிபாலுண்டு
சமாதிநிலையிற் சென்று காமியங்கள்போக்கி
யுனக்குளறி வொன்றுபட வுறுதியாக்க
வுத்தமர்கள் பின்றடர்ந்து வுலைமேலேற்றுஞ்
சனற்குமார் நால்வருமே சார்ந்தமார்க்கஞ்
சசியல்லால் வேறுகதி யில்லையப்பா
மனக்குள்வெளி யாய்த்தோன்றி மோனங்காட்டும்
மகாதபசிகள் சென்ற மார்க்கந்தானே.

இராகம் சங்கராபரணம் ஆதி தாளம்.

பல்லவி.

இந்த மதியால் வருவாய்
எந்தனிரு கண்ணினிறைச் சுந்தரச் சுயஞ்சோதியே

அனுபல்லவி.

இந்தமதியால்வருவாய் அந்தகனில்லாமற்செய்வாய்
சொந்தமதிவிந்துவாலே பைந்தொடியிடஞ்செல்லாமல் (இந்த)

பசியா விளக்க வருள்வாய்
பாசமதிலோசையடை வாசலைத்திறந்துநீயுஞ்
சசிபாலமிர்தமுண்ட சஞ்சலமில்லாப்பரனே
முசியாவரத்தைப்பெற்ற மூலசுந்தரேசாவாவா (இந்த)

முனைபிடித் தேறிநா னின்றேன்
மூலமதிலாளுகின்ற வாலையைவெளிப்படுத்தும்
வினையறுத்துவெளியில் வெட்டுப்படாசக்கரத்துள்
பனையிறக்கிகள்தாவா பதியாலமைந்தகோவே (இந்த)

மாதம்பத் துளான வுருவே

வாதமாடிகிதம்பாடி நாதவொலியிலின்றேனே
யாதவனேபாதமளி போதம்வெளியாய்ப்போகுமே
சிதமதியாலெமனை பாதிபிறையாலோட்டுமே (இந்த)

வெண்பா.

தானே பரஞ்சோதி தானேதா னெவ்வுயிர்க்குந்
தானேதான் ஞானி சார்ந்தவர்கள்—வானேபோய்க்
கங்குல்பக லற்றதுவாய்க் கதியால் விதிபெருகி
தங்குமே சாதனையில் நா.

இராகம் மோஹனம் ஆதிதாளம்.

பல்லவி.

தடுத்து மதிபிடித்து வாராயோ யிந்த
தையல்வாசற் குள்ளிருக்கு மையன்கோவிற் சன்னதிக்கு

அநுபல்லவி.

அடுத்துவருவீரோநீரு மாணைசொல்லும்வீணேவேண்டாம்
படுத்துத்தூங்கவேபோவாய் பாசபந்தம்விட்டுவாரும் (தடுத்து)

சரணங்கள்.

சிதமதியாற்பொருந்தும் பாதகனுடையயப்பா
பாதம்பணியாசானிடஞ் சாதனைவை:பாரேபாரும் (தடுத்)

பெண்களரவங்கடித்தாற் பேருசொல்லநீதியுண்டோ
கண்கொள்ளாகாட்சியிதோபார் காணவருவீரோசொல்லும் (தடுத்)

ஐயமில்லைமையபீடம் வையுமன்தைநீயதில்
தையலுடனய்யன்கூடி சமாதியோகஞ்செய்வார்பாரு (தடுத்)

விருத்தம்.

மூடு மந்திரமிது நாடி யுள்ளேசென்றால்
மாடி யானவொரு மண்டபங்
காடு மேகடந்தவ் வெளி யிற்புக
காண லாந்தபமும் வேணுமே
தேடு மாசான்கையால் தீட்சை பெற்றுமதி
திங்கள் கூடிகதி ராகவே
சாடு மேசமுசாரக் கடல் விட்டேகி
சாரங் கொண்டுமதி தாவுமே.

இராகம் சங்கராபரணம் தாளம் ரூபகம்

பல்லவி.

பள்ளியறை யொன் றிருக்குதா மது
பசுபதிபாச மூன்றுஞ்சுழி முனைக்குள் வெளிதனிலே

அநுபல்லவி.

வெள்ளியங் கைலைதன்னி லிருக்குதாம்
வேடிக்கை பார்க்கலா மாடித்திருவிளை யாடற்கூடிப் பாடிநிற்கும் (பள்ளி)

சரணங்கள்.

என்னுக்குள்நின்றபிர மானந்தம்பள்ளியா
மோகப்பெருவெளியிற் காலைத்தூக்கினேன்
கண்ணுக்குண்மணியாய் விண்ணிலேகண்ணிலே
கருவாயுருவாயது குருவாகியேநிற்கும்(பள்ளி)

ஆண்டவனும்வந்து தாண்டவமாடுவா
னம்பலமென்னும் பள்ளியவனுமே
பூண்டவனும்பள்ளி யாண்டவனுருவான்
பொறியாய்நெறியாய்க் காலைப்பரியேறியேபிடி(பள்ளி)

சகலஜீவராசிக் குள்ளும்பள்ளியாஞ்
சார்ந்தவர்கண்ணுக் குண்டுமாத்திரம்பள்ளி
புகலவேவேதம் படைத்ததும்பள்ளியாம்
புசியாப்பசியாமன சிசியப்போய்க்காண்பாயே(பள்ளி)

சிந்துபைரவி ஆதிதாளம்.

சிதம்பரம்பாம்பரையான ஞானமோனமே
சிற்றடிதூக்கிநின்றோர்க்கு முற்றமேபிரமானந்தமே (சிதம்)

பதம்பெறநிதந்தேடி பற்றிநின்றபேர்க்கிதோ
சதம்பெறசிதம்பரஞ் சர்வஞானங்கூடுமே (சிதம்)

ஆசைக்கடலில்விழுந்தா லோசையடக்கப்போகுமோ
வேசையாசையிதில்லையே வெட்டுஞானங்கிட்டுஞ்சொன்னேன் (சிதம்)

துரியநிலைகடந்து தோணிபோகும்பாருகண்டு
வரியபிரமமதுசானந்த வெளியாய்த்தோணுஞ் (சிதம்)

வெண்பா.

பிறந்துழன்றுங் கண்டிலையோ பேதை மடநெஞ்சே
மறந்துவிரு ளறைவிட்டு வாராயோ—யிறந்துவிட
போவாயோ நீயும் பொன்னம் பலந்தேடி
யாவாயே யல்லுபக லறி.

இராகம் தேசிகதோடி தாளம் ரூபகம்.

பல்லவி.

மாதர்கள் வலையிற் சிக்காதி ரிந்த
வையகத் தாசையால் மதிமோசம் போகாதீர்

அநுபல்லவி.

காதலோடுஞ் சென்றுங் கைப்பொருளைத் தோற்றுங்
கஞ்சிக்குஞ் சோற்றுக்குங் காற்றாய்ப் பறந்தாயே (மாதர்)

சரணங்கள்.

மஞ்சள்மினுக்குடன் கொஞ்சிமுத்தமிட்டு
மடியிற்கைபோட் டுனை இழுப்பள் உன்னை
தஞ்சமென்றடைந்தேன் சாமிநீயாளாய்
சரசலீலைசெய் யென்றழைப்பள் தினங்
கொஞ்சமுமன திரங்காப்பாவியாவள்
கூச்சமற்று வெளிவருவள் வெகு
வஞ்சகங்கொண்டுமே யந்சாநெஞ்சுடையாள்
வார்த்தையாற்பேசி பசப்புவாளையையோ (மாதர்)

கண்ணுக்குமையிட்டு கைமோதிரங்காட்டி
கண்டுநகை முகஞ்செய்வள் மேலுங்
கம்மல்சிமிக்கியுங் காதிலோலைபோட்டு
காமப்பேய் கொள்ளவுமுய்வள் நித
மெண்ணும்படிக்கிசைந் தல்குலிலிறக்க
விசைந்துகூட வுனைநைவள் நீ
யேமாந்துபோகவும் பாய்மரம்போலாக்க
வெல்லையில்லாமோகஞ் செய்வாளேபார்த்தீரோ (மாதர்)

சேலைகட்டியுமே மாதுகொங்கைதனிற்
சித்ரவிக் கையும்பூட்டுவள் வங்கஞ்
செக்கச்சிவக்கவும் பக்குவத்தாம்பூலந்
தின்றுதின்று விதழ்காட்டுவா ளொரு
மாலைப்பொழுதினில் மையல்வரும்படி
மயங்கிச்சேரவும் வந்தோட்டுவ ளங்கே
மண்ணில்மடியவே புண்புரைகட்டியும்
வாங்கிக்கொண்டேபோக பாங்கிகள்செய்வளே (மாதர்)

அணைத்துமுத்தமிட் டழுதகண்ணீருட
னாசைக்கிசைந்த பெண்ணெனன்பள் நா
னையோவொருக்காற் பிரியேனுனைப்போல
வன்புள்ளபத்தா வென்றென்ப ளாசை
யிணைத்துவுனைக்கூ டிளகிமனம்வாட
யெப்போதுந்த னிடமென்பள் பார்த்
தேமாந்தெல்லோரு மதிலழிந்ததையு
மேனறியாமலே வீணாகப்போனீரே. (மாதர்)

## திருப்புகழ்.

ஒசைந்த மதியை பிழிந்த சாம்போற் றருவாயே
ஒனைத்து விண்மதி யமைத்து சமாதி செய்வாயே
வசந்த மதிநிலா மண்டபம் புக வருவாயே
வருகு நெருப்பார் கடக்கவும் வலம் புரிவாயே
அடித்து மதியை பிடித்து ரவியாற் றரவேணும்
அன்றாக்கி லேற வன்றாக்கி லுறவும் வரவேணுங்
கறுத்த மாயெற வெளுத்த தில்லை காட்டாயே
கதிராய் பூத்து வரு சமயக்கூத் தாட்டாயே
பதியி லிருத்த விதியறுத்து மேவரி யாவாய்நீ
பால னருணகிரிக்கு வருள்பத மேவாநீ
மருவுஞ் சுழியிற் புருவம் பார்த்துகண் ணுருவாவாய்
மாறி யிடகலை யேறிப் போகவுந் தெருவாவாய்
பத்தி மார்க்கமு முத்தி மோனநிலை யுடையோனே
பரிதிமதியா லுருகி வந்து நில் லடையோனே
கண்ணிற் கலைமதி யோதி யருட்புரி யுபதேசங்
காலைத் தூக்கியே மேலே தாக்கிநில் விஸ்வாசஞ்
சத்தியெனை வந்து முத்தி கொடுக்கவு முகம்பாரு
சாமி யெனையாள் பூமதி யோகக் குருநாதா.

தந்ததன்ன தனனா தனனதன
தந்ததனன தனனா தனனதன
தந்ததனன தனனா தனனதன—தனதானா.

இந்திரியே கலையே யெதிரேயொளி
யந்தப்பதியே விதியே கெதியினொடு
சிந்தையறவே நிதியே கருணைமல ரடிசேராய்
அலையுமனதை யறிய வருக்கனொளி
கலையிலாடவு மளியே யிருளகலும்
வலைகளற மதியே வலத்திலிட வருவாயே
சிலையப்பசியா லறியே சாத்தினொடு
பசியாலிளைத்து விழியே மிரட்டிவிடு
கசியவசியக் குருவே காத்தினொளி கண்கூசம்
பெலகளாவங் கடியா மதியைநினை
திங்களொளியே ரவியா லாடவுமறி
பொங்குமதுவே பொழிய புலன்களற புரிவாயே
நெற்றிப்புருவ நடுவே நிலைமையொடு
முந்திப்போகவு முடலே சுருக்கியதை
சுற்றியெரியு முருவே வெளியில்வரப் பணிவாயே
வந்தவழியே செலவே வரும்வெளியே
சந்தையருளிற் குருவே தவத்தினொடு
பந்தமிலக்க பரையே பரப்பியொரு வருளாலே
வெட்டவெளியில் வரவே விவேகமருள்
நிட்டையதிலு முறவே நினவினொடு
வட்டமுதய நிறையே வரும்பொருளி லுறவாகி
சங்கையறவு மதியே சாத்திலிரு
பங்கயாசன குருவே கதிரொளியிற்
பொங்கிவருமே யமர்ந்த மதையுமறி குருநாதா




———✦———

# நோட்டீஸ்.

"இவ்வுலகில் கண்ணிறைந்த கண்ணேயென்கண்"

கலையில்வருங் கைதவப்பொருளை கவலையோடு கன்றுறுஞ் சகலருக்கு முன்னோர்களியற்றிய சுருதிகளின் முடிவை யேதென் றறியக்கூடா மறைப்பை நாயினுங்கடையன் நன்குணர்ந்து சற் குருவின் கைமுறையிலடுத்துக் கண்ணருளி பாய்ந்துருகி யாவ ரும் வெகு வெளிதினுணர வென்றாலெடுத்துரை சொல்லுமிரு சத்தியம். ஈதென்னுவாற் பெருக்கிச் சொலவெனக் கறிவில்லை. அந்நூல் "மோனானந்த மதியோக பூரணதீபம்" எனும் நாமம் படைத்து டிம்மி 8 பேஜி சைசில் இளேஸ் கடிதத்தில் சுமார் முப்பதுபாரம் வரையில் அச்சிட்டு வருகிறது. இதுவும் வேறு வேதாந்த நூல்களும் கூடியசிக்கிரத்தில் வெளிவரும். அந்நூற் கள் தந்தம் பெருமையை தாமேயுரைக்கும். காகிதப்பஞ்ச நிமித்தஞ் சொற்ப காப்பிகளே வெளிவருகின்றன. முந்துங்கள்.

பூரணமாலையும் பின்வரும் நூல்கள் கிடைக்குமிடம்.

விநாயகமூர்த்தி சுவாமிகள் மடாலயம்,

வடுகூர், நீர்முளை போஸ்ட்,

திருத்தருப்பூண்டி.